# ஸ்ரீ மஹாபாரதம்.

# விராடபர்வம்.

கும்பகோணம், கோபாலவிலாஸ் புஸ்தகசாலைத்தலைவர்
மத்வசாஸ்த்ரஸம்பூர்ணர்,

**பிரம்மஸ்ரீ அ. வேங்கடேசாசார்யர்**

அவர்களால் மொழிபெயர்க்கப்பெற்று,

கும்பகோணம் காலேஜ் ரிடையர்ட் தமிழ்ப்பண்டிதர்

**ம. வீ இராமானுஜாசாரியரால்**

பதிப்பிக்கப்பெற்றது.

நான்காம் பதிப்பு

விலை ரூபா 2—4—0 : தபால்சார்ஜ் ரூபா 0—8—0

PRINTED AT THE KESARI PRINTING WORKS.
G. T. MADRAS.

1933

ஸ்ரீ

# விராடபர்வ நான்காம் பதிப்பின் முகவுரை.

இந்த விராடபர்வத்தைப்பற்றித் தெரிவிக்கவேண்டியவற்றை இதன் முதற்பதிப்பு மூன்றும்பதிப்புக்களின் முகவுரைகளில் தெரிவித்திருக்கிறேன். வனபர்வ இரண்டாம்பாகத்தின் முகவுரையில் ஸ்ரீ மஹாபாரதத் தமிழ்மொழிபெயர்ப்பின் வரலாறுமுழுதும் ஒருவாறு தெரிவிக்கப்பட்டுள்ளது. அங்கே, சில விஷயங்கள் விரிவுஅஞ்சித் தெரிவிக்கப்படவில்லை. இப்பால், அவைகளைத் தெரிவிப்பது அவஸ்யமென்று தோன்றுதலால், அவைகளைமாத்திரம் இங்கே சுருக்கமாகத் தெரிவிக்கிறேன்.

## இந்த மொழிபெயர்ப்பைப் பற்றிய சில கொள்கைகள்.

வடமொழியில் ஸ்ரீ மஹாபாரதத்திற்குப் பலபதிப்புக்கள் உள்ளன. ஆனால், அவைகளில் ஒன்றுக்கொன்று சில சில இடங்களில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஆதலால், ஒருபதிப்பையே பின்பற்றி மொழிபெயர்ப்பது அவஸ்யமாயிற்று. கும்பகோணம் மத்வவிலாஸப் பதிப்புத் தென்தேசப்பாடத்தைத் தழுவியிருத்தலாலும், அதனைப் பின்பற்றி மொழிபெயர்க்கவேண்டுமென்று பல பெரியோர்கள் கூறினமையாலும், நான் அதனையே முதல் நூலாக வைத்துக்கொண்டு அதிலுள்ளபடி நேரே மொழிபெயர்த்திருக்கிறேன். இந்த விவரத்தை ஆதிபர்வமுகவுரையிலும் வனபர்வ இரண்டாம்பாக முகவுரையிலும் தெரிவித்திருக்கிறேன். பொருந்தாத சில அதிகபாடங்களும் பொருள்விளங்காத சில தொடர்களும் கூறியதுகூறலான சிலவாக்கியங்களுமே மொழிபெயர்க்கப்படவில்லை. அப்படிப்பட்ட இடங்களில், பெரும்பாலும், கீழே குறிப்புக்கள் எழுதப்பட்டுள்ளன.

இந்த மொழிபெயர்ப்பு ஒருமதச்சார்பாக இல்லாமல் எல்லாரும் ஒப்புக்கொள்ளும்படி பொதுவாயிருக்கவேண்டுமென்பதே என்னுடைய முக்யமான கொள்கை. ஒரு மதத்தினருக்கு அனுகூலமாகவோ பிரதிகூலமாகவோ முதல்நூலிலுள்ளதை மாற்று

வதோ விலக்குவதோ இல்லாததைச்சேர்ப்பதோ செய்வதில்லை என்பதும் என்னுடைய விரதம்.

மஹாபாரத மொழிபெயர்ப்பு யாவரும் படித்துத் தெரிந்து கொள்ளும்படி எளியநடையில் இருக்கவேண்டுமென்பதும் என்னுடைய கொள்கை. ஆதலால், யாவரும் எளிதில் தெரிந்து கொள்ளக்கூடிய சொற்களையன்றிக் கடினமான சொற்களை உபயோகிப்பதேயில்லை; கடின ஸந்திகளையும் உபயோகிப்பதில்லை. சாஸ்திர சம்பந்தமான பரிபாஷைகளைத் தமிழில் மொழிபெயர்த்தால் ஸாதாரண ஜனங்களுக்கு அதிக கடினமாகுமேயன்றி எளிதில் பொருள் விளங்காதாகையால், அவைகளை வடசொற்களாகவே உபயோகித்திருப்பதோடு, உச்சரிப்பும் வடமொழிக்கு ஒத்தே இருக்கும்படி எழுதியிருக்கிறேன்.

ஆதிபர்வ முகவுரையில், 'பாஷையைக்காட்டிலும் விஷயத்தை முக்கியமாகக் கவனிக்கவேண்டுமென்று அறிஞர் பலரும் அடிக்கடி வற்புறுத்தினமையால் அந்த முறைப்படி ஸம்ஸ்கிருத பாஷையிலுள்ள கருத்துக்களை அமைக்கும்வகையில் தமிழ்நடை சில இடங்களில் சிறிது மாறியிருத்தல்கூடும். மொழிபெயர்ப்பு மூலத்திலுள்ளபடியே இருக்கவேண்டுமென்பதே முழுநோக்கமாதலால், தமிழ்நடை தன் ஸ்வதந்திரநடையைச் சிறிது விட்டிருக்க வேண்டிவருகிறது. எந்தமொழிபெயர்ப்பும் மூலத்தின் விஷயங்களை விளங்கச்செய்யமாத்திரம் முடியுமேயல்லாது பாஷையின்நடையோடு இயற்கையில் அமைந்த ரஸபாவங்களை முழுதும் வெளியிடக்கூடாதென்பது ஒரு பாஷையிலிருந்து மற்றொருபாஷையில் விஷயங்களை மாற்றிக்கொண்டுவர முயற்சிசெய்கிற யாவர்க்கும் தெரிந்தவிஷயமே. ஆதலால், மொழிபெயர்ப்பாக இருக்கும் அளவில் இருக்கவேண்டிய குணங்களைமட்டும் பார்த்துக் குற்றங்களை க்ஷமிக்கும்படி விவேகிகளை ப்ரார்த்திக்கிறேன்' என்று எழுதியிருக்கிறேன். அதனையும் இங்கே தெரிவிக்கிறேன்.

ஒரு பண்டிதர் மொழிபெயர்த்ததை வேறு இரண்டு பண்டிதர்கள் ஒப்பிட்டுப் பார்ப்பதும் அவர்களுக்கு ஏதாவது ஆக்ஷேபமிருந்தால் அந்த இடத்தை முதலில் மொழிபெயர்த்தவர்களுக்கு அனுப்புவதும் வழக்கம். மொழிபெயர்த்தவர்களுக்கும் அந்த ஆக்ஷேபம் 'சரி' என்று தோன்றினால், அவர்கள் அந்தப்படி திருத்துவார்கள். அல்லது, தாம் பொருள் செய்ததே சரி என்று தோன்றினால், அதற்கு ஆதாரம் சொல்லுவார்கள். அந்த முறை

யில் சில இடங்களில் ஸந்தேகம்கேட்டு அனுப்பியபோது, அவர்கள் முதலில் மொழிபெயர்த்ததைத் திருத்தியும் முழுதும் மாற்றியும் எழுதி அனுப்பியிருக்கிறார்கள்; முன்எழுதிய காகிதங்களில் திருத்தச் சாத்தியப்படாத இடங்களில் வேறு புதிதாக எழுதி முன்காகிதங்களில் ஒட்டி அனுப்பியிருக்கிறார்கள். அப்படிப்பட்ட காகிதங்களில் சில ஜாக்ரதையாக வைக்கப்பட்டுள்ளன. வேண்டுவோர் அவைகளை என்னிடம் பார்க்கலாம்.

## தமிழ்மொழிபெயர்ப்பைப்பற்றிய சில ஸமாதானங்கள்.

பீஷ்மபர்வத்தில் பகவத்கீதாபர்வம் வெளிவரத்தொடங்கியவுடன், திருவண்ணாமலையிலிருந்து, ஒரு பெரியவர், மொழிபெயர்ப்பு தமது கொள்கைப்படி இல்லாமைபற்றிக் குறைகூறி எழுதியிருந்தார்கள். அவர்களுக்கு நேரே ஸமாதானம் எழுதியதுடன், பீஷ்மபர்வ முகவுரையில், 'கீதையின் மொழிபெயர்ப்பு, மஹாபாரதத்தின் மற்றப் பகுதிகளைப்போலவே, ஒருமதச் சார்பாக இராமல் பொதுவாக இருக்கவேண்டுமென்பதே எனது விருப்பம். ஆயினும், வேதாந்த பாகங்கள் வரும்பொழுது, அங்ஙனம் செய்தல் ஸாத்யப்படவில்லை. மொழிபெயர்ப்பவர்கள் எந்தமதத்தைச் சார்ந்தவர்களோ அந்தமதத்தின் சார்பாகத்தான் மொழிபெயர்ப்பு அமைகிறது. இதனைப் பகவத்கீதையில் மாத்திரமே அன்றி, மற்றப்பருவங்களிலும் வேதாந்தப்பகுதிகள் வருமிடம்தோறும் காணலாம். இந்தமாதிரியான இடங்களில் தங்கள் மதக்கொள்கைக்கு முரணாயிருப்பதாக நினைப்பவர்கள் தங்கள் தங்கள் சமயநூல்களில் வல்ல பண்டிதர்களிடம் கேட்டுத் தெளிந்துகொள்க' என்று எழுதியுமிருந்தேன். அந்தப்பெரியார் உண்மையை அறிந்து ஸமாதானம் அடைந்தார்கள்.

இப்பால், சாந்திபர்வ மோக்ஷதர்மத்தில் சில சுலோகங்களுக்கு நன்கு பொருள்விளக்கப்படவில்லை என்று சிலர் குறைகூறுவதாகக் கேட்டேன். மஹாபாரதம் முழுவதிலுமே எளிதிற்பொருள்விளங்காத கடினசுலோகங்கள் பல உண்டென்பது பிரஸித்தமானது. அதிலும், மோக்ஷதர்மத்தில் கடினமான சுலோகங்கள் மிகஅதிகம் என்பதைப் பண்டிதர்கள் நன்கு அறிவார்கள். மோக்ஷதர்ம மொழிபெயர்ப்புவிஷயமாகப் பெரியோர் பலர் அடைந்த கவலையையும், நான் அடைந்த சிரமத்தையும், அது பூர்த்தியானதில் அடைந்த ஸந்தோஷத்தையும் சாந்திபர்வ

இரண்டாம்பாக முகவுரையில் விவரமாகத் தெரிவித்திருக்கிறேன். சுலோகத்திலுள்ள சொற்களைக்கொண்டு பொருள் தெரிந்து கொள்ளக்கூடாமல் வியாக்யானத்தைக் கொண்டே பொருள் நிச்சயிக்கக்கூடிய இடங்கள் பல உண்டு. சில சுலோகங் களிலுள்ள சொற்களுக்கு நேரே வியாக்யானம் இராது. அந்த மாதிரி இடங்களில் சுலோகத்திலுள்ள சொற்களுக்குப் பொருத்த மாகப் பொருள் செய்வதற்கு நாங்கள் பட்ட சிரமம் எல்லையில் லாதது. பண்டிதர்கள் மொழிபெயர்த்து எழுதியனுப்பிய கையெழுத்துப் பிரதியை ஒப்புநோக்கித் திருத்தும்போது, தக்க பண்டிதர்கள் சிலரும் நானும் ஒருநாள் முழுதும் மிகச் சிரமப்பட் டுப் பார்த்தும் கையெழுத்துப் பிரதியில் ஒருபக்கங்கூட ஸித்தம் செய்யமுடியாமல் போனதுண்டு. வியாக்யானத்தைத் தழுவியே மொழிபெயர்த்துவிடலாமென்றால் அது ஒருசார்பு பற்றியதாக இருத்தலால் சில இடங்களில் அதனை முழுதும் பின்பற்றக் கூட வில்லை. அந்தமாதிரி இடங்களில் சுலோகத்துக்குப் பொருள் விளங்காமையாலும், வியாக்கியானம் வேறுவிதமாகப் பொருள் படுதலாலும், நமது மொழிபெயர்ப்பு வியாக்யானத்திற்கு முழு தும் ஒத்தில்லாமையாலும், 'மொழிபெயர்ப்பு விளக்கமாயில்லை' என்று குறைகூறுவோர் கருதினார்கள்போலும். வியாக்யானத் தில் ஒரு சார்புபற்றிச் செய்திருக்கிற இடங்களில் அதனைப் பின் பற்றி மொழிபெயர்க்கவில்லை என்றும் மூலத்திலுள்ளபடி இயன்ற வரை நமது மொழிபெயர்ப்பு நேரே மொழிபெயர்க்கப்பட்டிருக் கிறதென்றும்அவர்களுக்கு இங்கே வணக்கமாகத் தெரிவிக்கிறேன்.

சாந்திபர்வத்தை மொழிபெயர்த்து உதவிய மஹா மஹோ பாத்யாய வேதாந்தகேஸரி பைங்காநாடு கணபதிசாஸ்திரிகளவர் கள் எழுதிய ஒருலிகிதத்தை இங்கே வெளியிடுகிறேன். அது வரு மாறு:—

'கள்ளிக்கோட்டை, 12-10-1910.

நமஸ்காரம். க்ஷேமம்.

ஆபத்தர்மப் பிரகரணம் பூர்த்தியாகி அனுப்பியது வந் திருக்கலாம். விஜயதசமிமுதல் மோக்ஷதர்மம் எழுதத் தொடங்குகிறேன். ஆனால், மோக்ஷதர்மம் கடினமான பாகமாகையால், கொஞ்சம் மெதுவாகவே எழுதவேண்டிய தாயிருக்கும். அன்றியும், இதில் மூலத்துக்கும் வியாக்யானத் துக்கும் ரொம்ப வேற்றுமை தோன்றுகிறது. வியாக்யாதா

மிகவும் பிரயாஸப்பட்டு ஒவ்வொரு சுலோகத்தையும் அத்வைதத்துக்கு [1] இழுக்கிறார். அதேவிதம் நான் எழுதுவேனாகில் உலகம் என்னை ஸ்வமத பக்ஷபாதி என்று சொல்லக்கூடும். மூலத்திற்கு உசிதமாய் வெளியாவதும் மனஸ்ஸாக்ஷிக்கு விரோதமில்லாததுமாகவே எழுதவேண்டுமென்பது என் கருத்து இவ்விதம் எழுதினால் பல இடங்களில் வியாக்யானம் ஒத்திராது. வியாக்யானத்தையும் பழைய உரை என்று வேறு எழுதினால் வேலை இரட்டிக்கும். இவ்விஷயத்திற்கு என்ன செய்யலாம்? எழுதத்தொடங்குவதற்கு முன்னமேயே தங்கள் அபிப்ராயம் தெரியவேண்டும். அல்லாமலும், மோக்ஷதர்மம் அச்சிடும்போது இந்தப் பத்திரிகையிலுள்ள என் கருத்தையும் வேண்டுமானால் வெளியிடலாம். எல்லாவிஷயத்திற்கும் பதில் எதிர்பார்க்கிறேன்.

நமஸ்காரம்.

தங்கள், ப. கணபதி சாஸ்திரீ.'

அருங்கலை விநோதர்களும் பரம ஆஸ்திகர்களும் ஸத்தர்ம பரிபாலகர்களும் ஸதாசார ஸம்பன்னர்களும் இந்த மஹாபாரத மொழிபெயர்ப்பை மிக ஆதரிப்பவர்களும் எனக்குப் பரம ஆப்தர்களுமான ப்ரம்மஸ்ரீ Prof. K. சுந்தரராம ஐயர் M. A., அவர்கள், "ஸ்ரீமான் கணபதி சாஸ்திரிகளவர்கள், 'நீலகண்டர் அவஶ்யமில்லாத பல இடங்களில் வலிந்து பொருள் செய்திருக்கிறார். இந்த மொழிபெயர்ப்பில் அந்த முறையைப் பின்பற்றவில்லை' என்று சொல்லியிருக்கிறார்கள்" என்று என்னிடத்தும் மற்றும் பல ஆப்தர்களிடத்தும் பலமுறை கூறியிருக்கிறார்கள். ஆதிபர்வம் ஸபாபர்வம் அநுசாஸனபர்வமாகிய மூன்று பர்வங்களை மொழிபெயர்த்துஉதவியவர்களான ஸ்ரீ. உ. சதாவதானம், தி. ஈ. ஸ்ரீநிவாஸாசாரியரவர்களும், இதே அபிப்ராயம் சொன்னதாகவும் அவர்களே பலமுறை சொல்லியிருக்கிறார்கள்.

மோக்ஷதர்ம மொழிபெயர்ப்பு விசிஷ்டாத்வைதக் கொள்கைக்கு மாறுபடாமலிருக்கிறதா என்று ஒப்பிட்டுப் பார்க்கும்படி சில ஸ்ரீவைஷ்ணவப் பெரியோர்களிடம் நான் கேட்டுக்கொண்டபோது, அவர்கள் பார்த்து, இந்த மொழிபெயர்ப்பில் அங்கங்கே வேறுபாடுகளைக் குறிப்பது போதாதென்றும் தனியாகவே மொழிபெயர்க்க வேண்டும் என்றும் சொன்னார்கள். இவற்றால்,

---

[1] இதன் 28-வது பக்கம் குறிப்பைப் பார்க்க.

பொதுவாக மஹாபாரதமொழிபெயர்ப்புவிஷயத்திலும் சிறப்பாக மோக்ஷதர்ம மொழிபெயர்ப்பு விஷயத்திலும், எங்களுக்கிருந்தசிரமமும் பிறருக்கிருந்த கருத்துவேறுபாடுகளும் நன்கு விளங்கும்.

சாந்திபர்வத்தை மொழிபெயர்த்துஉதவியவர்கள், ப்ரம்மஸ்ரீ வேதாந்தகேஸரி மஹாமஹோபாத்யாய பைங்காநாடு கணபதி சாஸ்திரிகளவர்களும், ப்ரம்மஸ்ரீ வேதாந்தவிபூஷணம் மஹோபதேசகர் சாஸ்திரரத்னாகரம் மஹாமஹோபாத்யாய கருங்குளம் கிருஷ்ணசாஸ்திரிகளவர்களும் ஆவார்கள். பொதுவாக ஸம்ஸ்கிருதபாஷையிலும் சிறப்பாக வேதாந்தசாஸ்திரத்திலும் இந்த இரண்டு பெரியார்களும் வித்வான்களுடையகூட்டத்தில் எவ்வளவு நன்குமதிக்கப்பட்டவர்களென்பது உலகம் அறியும். அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டதே விளக்கமாக அமையவில்லையானால், விஷயம் எளிதில் பொருள்விளங்காத கடினத்தன்மையுடையதென்று கருதி ஸமாதானம் அடையவேண்டும்.

சாந்திபர்வத்தில் மோக்ஷதர்மத்தைமாத்திரமாவது மூன்று மதங்களிலும் அந்தஅந்தமதநூல்களில் மிக்க பாண்டித்தியமுள்ள தக்கவித்வான்களைக்கொண்டு சோதித்து அச்சிட்டு வெளியிடவேண்டுமென்பது என்னுடைய விருப்பம். ஸ்ரீமஹாபாரதம் பொதுவான நூலாதலாலும் ~~மோக்ஷதர்மம் மூன்~~றுமத வேதாந்த பாஷ்யங்களுக்கும் முக்யஆதாரமாயிருத்தலாலும் அது நன்குதிருத்தமடைந்துவெளிவருவது இந்துக்களான யாவருக்கும் நன்மையானது. இது மிக்கபொருட்செலவினாலும் பலநாள் உழைப்பினாலும் நிறைவேறக்கூடிய காரியம். தேசாபிமானமும் மதாபிமானமுமுடைய செல்வவான்கள் மனமுவந்து உதவிபுரிய முன்வருவார்களானால் அதுஸம்பந்தமாக நான் செய்யக்கூடிய கைங்கர்யத்தைச்செய்ய ஸித்தனாயிருக்கிறேன். அல்லது, அவர்களே தக்க பண்டிதர்களைவைத்துக்கொண்டுபார்த்துத் திருத்திக்கொடுத்தால், ஆக்ஷேபமில்லாமல் பொதுவாகவுள்ளவற்றை நூலிலும், ஒரு கொள்கை பற்றியவற்றைக் கீழே குறிப்பிலும் சேர்த்துப்பதிப்பிப்பேன். குறைகூறுவோர் இந்தவிஷயத்தை மனத்திற்கொண்டு உண்மையாக முயற்சிசெய்ய வேண்டுகிறேன்.

மஹாபாரத மொழிபெயர்ப்பை வெளியிடத் தொடங்கியது முதல் அதைப்பற்றிப் பாராட்டிப் புகழ்ந்து எழுதியிருப்பவர்களின்கடிதங்கள் எண்ணிலடங்கா. ஸாதாரணமாக ஸமாசாரங்

கள் எழுதுகிற கடிதங்களிலும், மொழிபெயர்ப்பின் பெருமையையும் இது தமிழுலகத்துக்குப் பெரும்பயன் அளித்தலையும் இதனை வெளியிடுவதிலுள்ள சிரமத்தையும்பற்றிப் பாராட்டி எழுதப்பட்டிருக்கும். அவற்றையெல்லாம் அச்சிட்டு வெளியிடுவதானால் மஹாபாரத புஸ்தகத்தின் அளவுக்குக் குறையாது. நேரே ஸந்திக்கும்போதும் நான் இல்லாத பல ஸமயங்களிலும் சொல்லுகிற புகழ்மொழிகளுக்கும் அளவே இல்லை. 'மனித முயற்சியில் செய்து முடிக்கக்கூடிய செய்கையன்று' என்று பாராட்டிக்கூறுபவர்கள் பலர். இந்த மொழிபெயர்ப்பின் உதவியைக்கொண்டே தாங்கள் மஹாபாரத ப்ரஸங்கம் செய்துவருவதாகச் சில தக்க பண்டிதர்கள் எழுதியதுமுண்டு. இவற்றையெல்லாம் நானே தெரிவித்துக்கொள்ளப் பெரிதும் வெட்கம் அடைகிறேன். இந்த அளவு தெரிவித்துக்கொள்ளும்படி நேர்ந்ததற்குக்கூட மிக வருந்துகிறேன்.

காரணமில்லாமல் அங்கங்கே குறைகூறிக்கொண்டிருப்பவர்களும் சிலர் உண்டு. இவர்கள் சொல்வனவற்றை அங்கங்கே கேட்பவர்கள் நேரில் தெரிந்துகொண்டிருக்கக்கூடும். தங்களுக்கு உண்டான ஸந்தேகமுதலிய காரணங்களால் குறைகூறி எழுதப்பட்ட கடிதங்களும் பல. அவைகளையெல்லாம் முழுதும் தெரிவிப்பது ஸாத்யமில்லை. ஆகையால், மாதிரிக்காக ஒன்றைமாத்திரம் இங்கே தெரிவிக்கிறேன். அது வருமாறு:—

'மகா-ா-ா-ஸ்ரீ, வேத மூர்த்திகளாகிய ஸ்ரீமத். உ. வே. ம. வீ. இராமானுஜாசாரியர்அவர்கள் உபயசரணாரவிந்தங்களுக்கு மேலக்குமாரமங்கலம் ர.சு. ரங்கஸாமி ஐயர், மேட்டுப்பாளையம் முத்துரெட்டியார் ஆகிய நாங்கள் இருவரும் அநேககோடி ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்துப் பக்திபுரஸ்ஸரத்துடன் தெரிவித்துக்கொண்ட விஞ்ஞாபனம்.

உபயகுசலோபரி.

நாங்களிருவரும் தங்களிடமிருந்து ஆதிபர்வம் பீஷ்மபர்வம் துரோணபர்வம் கர்ணபர்வம் இந்த நான்குபர்வங்களையும் வருவித்து அவைகளிலுள்ள பகவானான நாராயணனுடைய பரத்வத்தைப்பார்த்து மிகுந்த ஆனந்தம் அடைந்தோம். கொஞ்சநாளைக்குமுன், ரெட்டியார் விராடபர்வத்துக்கு எழுதி அச்சமயம் கையிருப்பில் இல்லையென்று தாங்

கள் எழுதியதும் தேவரீர் திருவுள்ளத்திற்கு ஞாபகம் இருக்கும். தவிர, நாங்கள் சாந்திபர்வ அநுசாஸனபர்வங்களையும் மற்றவைகளையும் வருவிக்க உத்தேசித்து, கணிசப்பாக்கம் ஸம்பத்ஸ்வாமிகளிடமிருந்து அநுசாஸன பர்வத்தின் முதல் ஸஞ்சிகையை வாங்கிப் பார்த்ததில், 45 முதல் 50 வரையிலுள்ள அத்யாயங்களில் முன்பின்னுள்ள ஸமஸ்தமான விஷ்ணு பரத்வத்துக்கு நேர்விரோதமாகச் சிவபரத்வமானது விஷ்ணுஸர்வோத்க்ருஷ்ட கண்டனமாகக் கிருஷ்ணன் தவம்செய்தார் என்றும் சிவனிடம் புத்ரவரம் பெற்றார் என்றும் உபமன்யுவிடம் உபதேசம் பெற்றார் என்றும் விஷ்ணு சிவனிடம் உற்பவித்தார் என்றும் லிங்கபூஜையாலேயே விஷ்ணு லோகாதிபதி ஆனாரென்றும், பிரம்மலோகத்தில் தண்டியால் செய்யப்பட்ட சிவஸஹஸ்ர நாமாதிகளும் அதிவிரிவாக இன்னபடியென்று வாய்விட்டுச் சொல்வதற்கில்லாது மிகுந்த துவேஷத்தைத் தன்னுள் அடக்கியதாக விளங்குகிறது. மொழிபெயர்த்தவரும் அச்சிட்டவர்களுமாகிய ஸ்ரீநிவாஸாசாரியரும் தேவரீரும் ஸம்பிரதாயக்கடல் கடந்த பண்டிதர்களான ஸ்ரீவைஷ்ணவர்களாயிருந்தும் மேற்கண்டவிஷயமான உபமன்யு உபாக்யானத்திற்குத் தகுந்த ஸமாதானமில்லாமல் இருக்கின்றதை யோசிக்குங்கால் எங்கள் மனம் மிகுந்த துயரம் அடைகிறது. உபமன்யு உபாக்யானத்தைச் சிலவித்வான்கள் பிரக்ஷிப்தம் என்று சொல்லிக்கொண்டிருக்க, தாங்கள் அதை அவ்விதம் என்று அறிந்திருந்தும் இப்படி அச்சிட்டதை நோக்குங்கால் எங்களுக்கு விபரீதமாகத் தோன்றுகிறது. அது உண்மையாகில் அந்தப் பர்வத்திலுள்ள விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தைப்போல சிவஸஹஸ்ரநாமத்துக்குத் திரிமதஆசாரியர்களும் ஏன் பாஷ்யம் செய்யவில்லை? ஆரண்யபர்வத்திலுள்ள சிவவிஷயமும் துரோணபர்வத்திலுள்ள அஸ்வத்தாமா விஷயமான சிவபரத்வமும் வருவது ஸகஜமே. அவைகளைப்போலில்லாமல் இது விஷ்ணுகண்டனமாயிருப்பது மிக வருந்தற்பாலது. பர்வங்கள்தோறும் சிவனைப் பிரம்மாவின் புத்ரனென்று ஸ்தாபித்திருக்க, இவ்விடம் மட்டும் கண்டனமானதற்குக் காரணம் என்ன? இவைகளை நோக்குங்கால் ஆழ்வாராசாரியர்களான மஹான்களுக்கும் அன்னவர்கள் நூல்களுக்கும்

நேர் விரோதமானதாய் விளங்குகிறது. மேற்கண்ட சரித்திரம் உண்மையிலேயே வியாஸரால் பாரதத்தில் எழுதப்பட்டதா? தங்கள் மொழிபெயர்ப்புக்கு மூலக்கிரந்தமான T. R. கிருஷ்ணசாரியர்பதிப்பும் அவர் கருத்தும் இதை ஏற்றுக்கொள்ளுமா? சதாவதானம் ஸ்ரீநிவாஸாசாரியருக்கும் தங்களுக்கும் இது நிஜமென்று நம்பிக்கையுண்டா? இதற்கு நாளதுவரையிலும் பாரதத்தில் கற்பனை என்பதற்கு ஆதாரமில்லையா? அல்லது, அவ்விதம் கண்டித்து எழுதினல் தற்காலத்திய ஜனங்கள் புஸ்தகம் வாங்கமாட்டார்கள் என்று பேசாது விட்டுவிட்டீர்களா? இது யாது காரணமோ அதைத் தேவரீரே எங்களுக்கு எழுதி ஸம்சயநிவிருத்தி செய்தால் மிகுந்த நன்றியுள்ளவர்களாக இருப்போம். ஆதிபர்வத்திலுள்ள பராசர ஸத்யவதீ விவாஹம் என்பதைத் தகுந்த காரணத்துடன் கண்டித்த பண்டிட் ஸ்ரீநிவாஸாசாரியர் என்ன காரணம் பற்றி இதைக் கண்டிக்கவில்லை? வேத ப்ரதிபாத்யமான சக்ரமானது சிவனிடமிருந்து விஷ்ணு அடைந்தார் என்பதைப் பார்க்குங்கால் தப்தசக்ராங்கனத்திற்குக்கூடவன்றோ பழுது வந்துவிட்டது. 'நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும்—தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்' என்பதற்குக்கூடப் பங்கம் வந்துவிட்டதே. இப்படிச் சொல்லத்தரமில்லாமல் ஸர்வ விதத்திலும் விஷ்ணுபரத்வ கண்டனமான இந்த இதிஹாஸம் விஷ்ணுபரமான பாரதகதையில் எதற்காக விளங்குகிறது? மேற்கண்ட இந்த விஷயங்களுக்கெல்லாம் தேவரீர் கோபித்துப் பராமுகமாயிராது உங்கள் குழந்தைகள் என்று நினைத்து உடனே பதில் எழுதவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம். பாரதம் ஆதிபர்வத்தின் ஆதியில், ஸௌதியானவர், 'அந்த நாராயணன்கதையைச் சொல்லுகிறேன்' என்றும், வில்லிபுத்தூராரும், 'மன்னு மாதவன் சரிதமும் இடையிடை வழங்கும்' என்றும் ஒரே வாக்காகச் சொல்லியிருக்க, அப்படிப்பட்ட வைஷ்ணவ கிரந்தத்துக்கு விரோதம் வந்தது வியக்கத்தக்கது. இதில் சொற்குற்றம் முதலிய இருந்தாலும் கோபிக்க வேண்டாம்.

இப்படி, தங்கள்
முத்து ரெட்டியார்.'

அவர்களுக்கு நான் எழுதிய பதில் வருமாறு ;—

'மணலூர், 16—12—1923.

அன்புள்ள ஐயா,

தாங்கள் அன்புடன் எழுதிய நீண்ட லிகிதம் வரப்பெற்றேன். ஸ்ரீ மஹாபாரதம் வேதத்தோடொத்தது. வேதத்தில் ருத்ரபாரம்யம் சொல்லிய இடங்கள் பல உண்டு. பதினெண் புராணங்களில் சிவபரத்வம் சொல்லுகிற புராணங்களே அதிகமானவை. அவைகளுக்கெல்லாம் ஶ்ருதி ஸ்மிருதி இதிஹாஸ புராணங்களின் பிராமாண்யதாரதம்மியத்தைக் கொண்டும் புராணங்களில் ஸாத்விக ராஜஸ தாமஸப் பாகுபாட்டைக்கொண்டும், கேள்வி உத்தரங்களின் நயத்தைக் கொண்டும், முன்பின் அமைந்துள்ள சப்தங்களின் ஸ்வாரஸ்யங்களைக்கொண்டும் அர்த்தம் செய்து, பெரியோர்கள் ஒற்றுமைப்படுத்துகிறார்கள். பாரதத்திலும் அப்படியே செய்து கொள்ள வேண்டும். இந்த விஷயங்களைக் கடிதமூலமாக எழுதுவது ஸாத்யமுமில்லை ; எனக்கு அவகாசமுமில்லை.

உபமன்யு உபாக்யானம் ப்ரக்ஷிப்தம் என்பது நம்மவர்களுடைய கொள்கையே. இது வெளிப்படை. ஆனாலும், இது புதிதாக எழுதிச் சேர்க்கப்பட்டதன்று. நமது பூர்வாசாரியர்காலத்திற்கு முற்பட்டதே. ஸ்ரீராமாயணத்தில் ஆதித்ய ஹ்ருதயமும் அப்படியே ப்ரக்ஷிப்தம் என்றுதான் பெரியோர்கள் சொல்லுகிறார்கள். ஸம்ஸ்கிருத புஸ்தகங்களில் இவைகள் சேர்த்தே அச்சிடப்பட்டிருக்கின்றன. நானும் எனக்காக மஹாபாரதத்தை மொழிபெயர்த்துக் கொடுக்க முன்வந்துள்ள வித்வான்களும் ஒரு பதிப்பை மூலமாக வைத்துக்கொண்டு அந்தப் பதிப்பிலுள்ளபடியே மொழிபெயர்த்து வெளியிட நிச்சயித்துக்கொண்டோம். அந்தப் பதிப்பிலுள்ளது விடுபட்டிருந்தாலும் இல்லாதது சேர்ந்திருந்தாலும் நாங்கள் உத்தரவாதியாவோம். மூலத்திலுள்ளதை மொழிபெயர்ப்பதே நாங்கள் இப்பொழுது மேற்கொண்டது. மதஸ்தாபனம் செய்வதன்று. லோகோபகாரமும் சிரமஸாத்யமுமான இந்தக் கைங்கர்யத்தை மேற்கொண்டு பல வருஷங்களாயினமையால் இதனை விரைவில் பூர்த்திசெய்ய வேண்டுமென்பதே என்மனத்தில் ஊன்றி

நிற்கிறது. வேறு ஒன்றிலும் என்மனம் செல்லவில்லை. ஆத லால், தாங்கள், தயைசெய்து, இனி இந்தமாதிரி விஷயங்களை எனக்கு எழுதாமலிருக்க வேண்டுகிறேன். திருவயிந்திர புரம் முதலான திவ்யதேசங்களில் மஹாவித்வான்கள் பலர் இருக்கிறார்கள். தங்களுக்கு உண்டாகும் ஸந்தேகங்களை அவர்களிடம் கேட்டுத் தெளிந்துகொள்ள விரும்புகிறேன்.

இங்ஙனம்,

அன்பன், ம. வீ. இராமானுஜன்.'

இவற்றால், ஸ்ரீ மஹாபாரத மொழிபெயர்ப்பை வெளியிடத் தொடங்கியதனால், மூலத்திற்கு அர்த்தத்தை நிச்சயித்து மொழி பெயர்ப்பைத் திருத்தலிலும் காரிய நிர்வாஹத்திலுமுண்டான பொருள்முட்டுப்பாட்டிலும் மற்றும் பலவகையிலும் அடைந்த பலவகைத் துன்பங்கள் தவிர, நான் எத்தனைபேருக்கு எத்தனை விதமாகச் சமாதானம் சொல்லவேண்டியவனாக இருந்தேனென் பதையும், அதனால் என் மனம் எவ்வளவு கவலையும் துன்பமும் அடைந்திருக்குமென்பதையும் அறிவுடையோர் நன்கு ஊகிக்க வேண்டும். இவ்வளவு சிரமத்தைக்கொடுத்தபிறகாவது இந்த அரியபெரிய நற்காரியத்தை நிறைவேற்றியருளியதற்காக எல்லாம் வல்ல ஸர்வேஶ்வரனுடைய அவ்யாஜமான பெருங்கருணைத்திறத் தை நான் பெரிதும் பாராட்டுகிறேன்; அவனுடைய திருவடித் தாமரைகளை எப்பொழுதும் சிந்தித்து வந்திக்கின்றேன்.

## மஹாபாரத ஸம்பந்தமாகச் சில ஸமாதானங்கள்.

மஹாபாரதத்தைபற்றிச் சிலர் விஷயத்தைஆராயாமல் குறைகூறுவர். அவர்கள், (1) மஹாபாரதத்தைப் படிக்கலாகா தென்றும், (2) படித்தால் கலகம் உண்டாகுமென்றும் (3) வீட்டில் படிக்கலாகாதென்றும், (4) முதலிலிருந்து முறையே தொடர்ச்சியாகப் படிக்கலாகாதென்றும் ஆதாரமில்லாமல் வாய்க் குவந்தவாறு கூறி மஹாபாதகத்திற்குக் காரணமாவர்.

(1) ஸ்ரீ வேதவியாஸ பகவானே ஹிந்துக்களாகிய நமக்கு ஸகலஞானத்தையும் அளித்தவர்; வேதத்தை வகுத்தவர்; பதி னெண்புராணங்களையும் தொகுத்தவர்; திருமால் திருப்பாற்கடல் கடைந்து அம்ருதம் எடுத்து உதவியதுபோல வேதமாகிய கடல் கடைந்து பிரம்மஸூத்ரமாகிய அமிருதத்தை எடுத்துக்கொடுத்

தப் பேருதவிபுரிந்தவர். பரமரிஷிகளும் புராணங்களும் அவரை ஸாக்ஷாத் பகவானே என்று சிறப்பித்துக் கூறுகின்றனர். அவரே மஹாபாரதத்தையும் இயற்றியவர். மற்றவைகளையெல்லாம் செய்ததைக்காட்டிலும் மஹாபாரதத்தைச் செய்ததற்காகவே, அவரை, '𑌕𑍃𑌷𑍍𑌣𑌦𑍍𑌵𑍈𑌪𑌾𑌯𑌨𑌂 𑌵𑍍𑌯𑌾𑌸𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌮𑍍 । 𑌕𑍋 𑌹𑍍𑌯𑌨𑍍𑌯𑍋 𑌭𑍁𑌵𑌿 𑌮𑍈𑌤𑍍𑌰𑍇𑌯 𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑌕𑍃𑌦𑍍𑌭𑌵𑍇𑌤𑍍 ॥ = ஓ! மைத்ரேயரே! கிருஷ்ணத்வைபாயனரான வியாஸரை ப்ரபுவான நாராயணரென்றே தெரிந்துகொள்ளும்: ஏனெனில், நாராயணரைத்தவிர இவ்வுலகில் வேறுயாவர் ஸ்ரீமஹாபாரதத்தைச் செய்யவல்லவராவார்?' என்று சிறப்பித்துக் கூறுகின்றனர். பத்துப் புராணங்களுக்கு அதிகமானவை வியாஸரையும் மஹாபாரதத்தையும் பாராட்டிப் புகழ்கின்றன. இன்றியமையாத தந்தை தாயார்களுக்கும் பித்ருக்களுக்கும் செய்யவேண்டிய கடமைகளையும் செய்யவேண்டாத ஸந்யாஸிகளும் வியாஸரைப் பூஜை செய்கிறார்களென்றால் அவர் பெருமையைச் சொல்லவும் வேண்டுமா? சாஸ்திரங்களை நம்புகிறவர்களெல்லாரும் அவர் சொல்லுவனவற்றையெல்லாம் நம்பவேவேண்டும். அவர், மஹாபாரதத்தின் பெருமையையும் அதனை ஒவ்வொரு வீட்டிலும் படிக்கவேண்டுமென்பதையும் அதனைப்படித்தலாலும் கேட்டலாலும் உண்டாகும் பல நன்மைகளையும் மஹாபாரதத்தின் முதலிலும் கடையிலும் விஸ்தாரமாகக் கூறியிருப்பதோடு, ஒவ்வொரு பர்வத்தின் முடிவிலும் பலபல உபாக்யானங்களின் முடிவிலும் அதை அதைப் படித்தல் கேட்டல்களினாலுண்டாகும் பயன்களையும் அங்கங்கே சிறப்பாகக் கூறியிருக்கிறார். இவற்றிற்கு ஆதாரம் மஹாபாரதத்தில் தொட்ட தொட்ட இடந்தோறும் காணலாம். அவர் சொல்லியிருப்பவை எல்லாம் நம்மை மோசஞ்செய்து நம்மிடமிருந்து ஒன்றைப் பெறுதற்காக அன்று. நாம் ஞானத்தை அடைந்து கடைத்தேற வேண்டுமென்னும் பெருங்கருணையினாலேயே. 'மஹாபாரதத்தைப் படிக்கவேண்டுமென்று ஸர்வஜ்ஞரும் பகவானுடைய அவதாரமென்று சொல்லப்படுகிறவருமான ஸ்ரீவியாஸர் சொல்லியதை நம்புவதா, யாரோ சிலர் சொல்லுவதை நம்புவதா' என்று அறிவுடையோர் ஊகிக்கவேண்டும்.

மஹாபாரதம் பல அரியவிஷயங்கள் அடங்கியதாததலாலும், தர்மார்த்தகாமமோக்ஷம் என்னும் நான்குபுருஷார்த்தங்களையும் நன்குதெரிவிப்பதாகையாலும் ஐந்தாம்வேதமென்று எல்லா

ராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருத்தலாலும் படித்தல்கேட்டல் களால் மஹாபாதகங்களையும் போக்கவல்லதென்று பல மஹரிஷி களாலும் பலபுராணங்களாலும் பெரிதும் புகழப்படுதலாலும், 'ஆதௌசாந்தேச மத்யேச விஷ்ணு: ஸர்வத்ர கீயதே' என்கிறபடியே பகவத்சரித்திரங்களே முழுதும் நிரம்பியிருத்தலாலும் இதனை ஸகல ஜனங்களும் கேட்கவேண்டுமென்பதற்காக நமது தேசத்துப் பண்டைக்கால அரசர்கள் இதனைப்படித்துப் பிரசங்கிப்பவர் களுக்கு மானியங்கள் கொடுத்திருக்கிறார்களென்பது சிலாசாஸ னங்களால் விளங்குகின்றது. இந்த விவரமும் மஹாபாரதத்தைப் பற்றிய மற்றும் பல விவரங்களும், [1] 'மஹாபாரதமும் திராவிட பாஷைகளும்' என்னும் புஸ்தகத்தில் கூறப்பட்டுள்ளன.

ஸ்ரீவேதவியாஸர் மஹாபாரதத்தை எழுதும்படி விநாய கரைக் கேட்டுக்கொண்டபோது, விநாயகர், 'எனது எழுத்தாணி தடைப்படாமல் வேகமாகச் சொல்லவேண்டும். தடைப்பட்டால் எழுத்தாணியைக் கீழே வைத்துவிடுவேன்' என்று சொன்னதாக வும், வியாஸர், 'அப்படியானால், தாங்கள் சுலோகங்களின் அர்த் தத்தை மனத்தில் வாங்கிக்கொண்டு எழுதவேண்டும்' என்று கேட்டுக்கொண்டதாகவும், விநாயகரும், 'அப்படியே செய்வேன்' என்று சொல்ல வியாஸர் சொல்லத் தொடங்கியதாகவும், அவர் சொல்லும்போது இடையிடையே விநாயகர் ஆலோசிக்கும்படி கடின சுலோகங்களைச் சொல்லிக்கொண்டுபோனதாகவும் ஒருகதை மஹாபாரதத்திலேயே வழங்குகிறது. இந்தக்கதையின் உண்மை எப்படியானாலும், '8800 சுலோகங்களை நான் அறிவேன்; சுகர் அறி வர்; ஸஞ்சயன் அறிந்தாலும் அறியலாம்' என்று வியாஸரே சொல்லி யிருக்கிற ஒருஶ்லோகத்தினால் மஹாபாரதத்தில் கடினமான சுலோ கங்கள் பலஉண்டு என்பது நிச்சயம். அவைகளுக்கு, 'முடிச்சுக்கள் அல்லது வியாஸகுட்டு' என்று பெயர்வழங்குகிறது. இப்படிப் பட்ட கடினமான கிரந்தத்திற்கு விளக்கமான வியாக்யானம் இல்லை. ஆதலால், இதில் சில ஶ்லோகங்கள் சிறந்த பண்டிதர் களுக்கு அன்றி மற்றவர்களுக்கு எளிதில் பொருள் விளங்கு

1 இந்தப் புஸ்தகம், சென்னை ஸர்வகலா சங்கத்தார் விருப்பத்தின் படி, நான் சென்னைப் பச்சையப்பன் காலேஜில் 1930ஆ பிப்ரவரிமீ 27, 28உ களிலும் மார்ச்சுமீ முதல் தேதியிலும் செய்த மூன்று உபந் நியாஸங்கள் அடங்கியது. அது அச்சில் இருக்கிறது; விரைவில் வெளிவரும்.

வதில்லை. "வேதமானது குறைந்த கல்விகேள்வியுள்ளவனைக் கண்டு 'இவன் நம்மை மோசம்செய்துவிடுவான்' என்று பயப்படுகிறது" என்று ஒருபுராண சுலோகம் கூறுகிறது. அப்படியே, இந்த மஹாபாரதமும் குறைந்த படிப்புள்ளவர்களைக் கண்டால் பயப்படுகிறது. அவர்களும் இந்த மஹாபாரதத்தைக்கண்டால் பயப்படுகிறார்கள். குறைந்த படிப்பும் அல்பபுத்தியுமுடைய போலிப்பண்டிதர்கள் தங்களுடைய அறியாமையை மறைப்பதற்காக 'மஹா பாரதத்தைப் படிக்கலாகாது' என்பது முதலிய சில அபவாதங்களைக் கட்டிவிட்டார்கள். நல்லசெய்திகள் பரவுவதைக் காட்டிலும் தீய செய்திகள் ஒன்றுக்குப் பத்தாகப் பெருக்கமடைந்து பரவுவது இயற்கையாதலாலும், நம்மவர்கள் பிறர் சொல்லுவனவற்றை ஆராயாமலே எளிதில் நம்பும் தன்மையுடையவர்களாதலாலும், இந்த அபவாதம் வழங்கலாயிற்று.

ஸ்ரீ மஹாபாரதத்தை மற்றக் காரியங்களுக்கு இடையே சில சில நேரம் படித்து வந்தால் முழுதும் படித்து முடிப்பதற்குப் பல வருஷங்கள் செல்லும். அதற்குள் ஏதாவது ஓர் அஸௌகர்யம் நேர்ந்தால், அதற்கு மஹாபாரதம் காரணம் என்னலாமா? இராமாயணம் படித்தால் ராஜ்யத்தை இழந்து காட்டிற்குப் போக வேண்டுமென்றும் பின்னும் பல துக்கங்களை அநுபவிக்கவேண்டுமென்றும் சொல்லலாமா?

ஸ்ரீமத் ராமாயணத்தை மொழிபெயர்த்து வெளியிட்டும் பிரஸங்கம் செய்தும் உலகத்தில் மிக்க புகழ்படைத்திருக்கிற சிலர் சிரமத்தை அடைந்திருப்பதை நாம் நேரில் பார்க்கவில்லையா? கேட்டதில்லையா? பலவருஷங்களுக்குமுன், நான் மஹாபாரதத்தை மொழிபெயர்த்து வெளியிடத்தொடங்கியபோது, ராமாயண முதலிய கிரந்தங்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுவதென்று சில தக்கவர்கள் தொடங்கிச் சிலஸஞ்சிகை வெளிவந்தவுடன், அவர்களுக்குள் கலகம் ஏற்பட்டுப் பிரிந்துபோய்ப் பிறகு சேராமலே இருக்கவில்லையா? சில இடங்களில் சில தக்கவர்கள் சேர்ந்து ஸ்ரீராமாயணத்தைத் தமிழில்மொழிபெயர்த்து வெளியிடத்தொடங்கிச் சிலபாகம்நடந்துவந்து பிறகுநடைபெறுமல்நின்றுபோகவில்லையா? தென்னாட்டில் தமிழ்க் கவிகளுள் கம்பர் கவிச்சக்ரவர்த்தி என்று கொண்டாடப்படுவதுபோல வடநாட்டில் ஹிந்தி பாஷைக் கவிகளுள் துளஸிதாஸ் என்பவர் கவிச்சக்ரவர்த்தி என்றும் தெய்வி

கம் வாய்ந்தவர் என்றும் கொண்டாடப்படுபவர். அவர் செய்த இராமாயணம் துளஸீதாஸ் ராமாயணமென்று மிக்க பிரஸித்தி பெற்றது. கும்பகோணம் மத்வவிலாஸ புஸ்தகசாலைத் தலைவர், ஸ்ரீமான் T. R. கிருஷ்ணாசாரியரவர்கள், மாத்வஸம்பிரதாயக் கிரந்தங்கள் பலவற்றையும் ராமாயண பாரத பாகவதங்களையும் பல வியாக்யானங்களுடனும் பல அரிய குறிப்புக்களுடனும் அச்சிட்டு வெளியிட்டவர்கள். அவர்கள் துளஸீதாஸ் ராமாயணத்தைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடத் தொடங்கினார்கள். அதில் ஒரு ஸஞ்சிகை வெளிவந்தது. பிறகு, நின்றே போயிற்று. இவற்றிற்கெல்லாம் இராமாயணம் காரணம் என்னலாமா?

புண்யஶ்லோகோ நலோ ராஜா புண்யஶ்லோகோ யுதிஷ்டிர:॥ புண்யஶ்லோகா ச வைதேஹீ புண்யஶ்லோகோ ஜநார்தந:' என்கிறபடி நளன் யுதிஷ்டிரர் ஜானகி ஜநார்த்தனர் ஆகிய இவர்கள் புண்ய ஶ்லோகர்கள் என்று பிரஸித்தர்கள். இவர்களுடையபெயரைச் சொல்லுவதனாலும் சரித்திரங்களைப் படித்தல் கேட்டல்களாலும் பாவங்கள் நீங்கிப் புண்யமுண்டாகுமென்பது பெரியோர் கொள்கை. அவர்களுடைய சரித்திரங்களையும் ஹரிச்சந்திரன் முதலிய சக்கரவர்த்திகளுடைய சரித்திரங்களையும் ப்ரஹ்லாதன் த்ருவன் முதலிய பக்தர்களின் சரித்திரங்களையும் படிக்கும்போது அவர்கள் கஷ்டம் அடைந்ததையும் பிறகு நன்மை அடைந்ததையுமே படிக்கிறோம். அதனால், அவர்கள் அடைந்த கஷ்டங்களையெல்லாம் நாமும் அடைவோம் என்று சொல்லலாமா? அவர்கள் அடைந்த துன்பங்களை அடையோம் என்பதையன்றோ பயனாகக் கூறுகிறார்கள்.

(2) மேல்நோக்காகப் பார்ப்பவர்களுக்கு மஹாபாரதத்தில் ஒற்றுமைக்குறைவு இருப்பதுபோலத் தோன்றினும் நூனுகிப் பார்த்தால், அஃது ஒற்றுமையை வளர்ப்பதென்பது நன்கு விளங்கும். பாண்டவர்கள் ஒருவரோடொருவர் கலகப்படுவதற்குப் பல காரணங்களிருந்தும் எவ்வளவோ கஷ்டங்கள் நேர்ந்தும் மிக ஒற்றுமையாக இருந்தார்கள்; ஸஹோதர வாத்ஸல்யத்தை மிக உறுதியாகக் கொண்டிருந்தார்கள். துரியோதனாதியர்கள் தீய செய்கையுள்ளவர்களாயிருந்தும் அவர்களும் தங்களுள் அந்த வழியில் மிக்க ஒற்றுமையுடையவர்களாக இருந்தார்கள். கோஷயாத்திரையில் துரியோதனனைக் கந்தர்வன் கட்டிப்போன

பொழுது, தர்மபுத்திரர், 'அன்னியர்கள் வரும்பொழுது நாம் நூற்றைவரும் ஸகோதரர்கள்' என்று சொல்லித் துரியோதன னுடைய கட்டைஅவிழ்த்துவிடச் செய்தார்.

மஹாபாரதத்தைத் தமிழில் காவியமாக விருத்தக்கவியில் இயற்றிய வில்லிபுத்தூராழ்வாருடையபெருமை உலகம் அறிந்தது. தமிழ்ப் புலவர்களில் அவர் கவித்திறத்தைப் பாராட்டாதவர்கள் இல்லை. தமிழ்படித்தவர்களில் அவர்பெருமையை அறியாதவர் அறியாதவரே. அவர் மஹாபாரதம் பாடியதற்கு ஒரு காரணம் கூறுவது உண்டு. அதாவது:-"வில்லிபுத்தூராழ்வாருக்கும் அவரு டைய தம்பிக்கும் தாயபாக விஷயமாகக் கலகமுண்டாயிற்று. அவர்அதனை அரசனிடம் தெரிவித்துக்கொண்டார். அவன் கேட்டு, 'கல்விக்கடலைக் கடந்த இத்துணைப் பெரியார்க்கும் காமக்குரோ தங்கள் நீங்கவில்லையே. பாக விஷயமாகச் சகோதரனுடன் கலகம் விளைக்கிறாரே! இவருக்கு யார் சொல்லுவது? இவர் தாமாகவே உணரும்படி செய்யவேண்டும்' என்று தனக்குள் நிச்சயித்து, அவ ரை நோக்கி, அவருடைய கவிபாடும் திறமையைப் புகழ்ந்து, 'நீர் மஹாபாரதத்தைத் தமிழில் பாடிக்கொணர்ந்தால் உமது வழக் கைக் கேட்டு முடிவுசெய்வேன்' என்று கூறினன். அவர் அப் படியே பாடத்தொடங்கி யுதிஷ்டிர பட்டாபிஷேகம்வரையில் பாடிமுடித்தனர். அவ்வளவில் மஹாபாரத யுத்தத்துக்குத் தாயபாகமே காரணமாக இருந்ததென்னும் உண்மை மனத்திற் பட, அவர் கலகம்நீங்கித் தம்தம்பியுடன் ஸமாதானமாகி அன்பு பாராட்டிச் சேர்ந்து வாழ்ந்தார்" என்பது.

இவைகளால், ஸ்ரீ மஹாபாரதம் ஒற்றுமையை உண்டுபண்ணு வதென்றே விளங்குகிறது. ஒற்றுமைக்குறைவை உண்டு பண்ணக் கூடியதென்று சொல்வதற்குக் காரணமே இல்லை. ஆதலால், ஒற்று மைக்குறைவை உண்டுபண்ணுமென்று சொல்வது சோம்பேறிகள் சொல்லுகிற ஆதாரமற்ற வார்த்தை என்பது உறுதியாகிறது.

(3) ஸ்ரீமஹாபாரதம் வீட்டிலிருப்பதே பரமக்ஷேமத்திற்குக் காரணமென்பது, 'பாரதம் பவநே யஸ்ய தஸ்ய ஹஸ்தகதோ ஜய:' என்பதனால் நன்குவிளங்கும். மஹாபாரத புஸ்தகம் வீட்டி லிருப்பதே பல நன்மைகளுக்குக் காரணமாகுமென்றால் அதனைப் படித்தல் கேட்டல்களால் உண்டாகும் நன்மைகளைச் சொல்ல வும் வேண்டுமோ? மஹாபாரதத்தைப் படித்துப் பொருள்

சொல்வதானல் பலவருஷங்கள் செல்லும். நம்தேசத்தில் பெரும் பாலும் நடந்துவருகிற வழக்கப்படி ஒருவர் வீட்டுத்திண்ணையில் உட்கார்ந்து சொல்லுவதானல், நீடித்த பலவருஷங்களில் அந்த வீட்டினருக்கு அயலாருக்குப் போக நேரலாம்; ஆசௌசம் முத லிய அஸௌகர்யம் நேரலாம்; அவைகளால் மஹாபாரதப் பிர ஸங்கத்துக்குத் தடை ஏற்படலாம்; பல வருஷங்கள் தொடர்ச்சி யாக இதனை வைத்து நடத்துவது ஒருகுடும்பத்துக்கு ச்ரமமா யிருக்கலாம்; சில வீடுகளுக்குச் சிலர் மனஸ்தாபம் முதலிய கார ணங்களால் வரக்கூடாமலிருக்கலாம்; ஒருவர் வீட்டுத் திண்ணை யில் வைத்து நடத்துவதில் சிலருக்கு ஆக்ஷேபமிருக்கலாம். ஆத லால், ஒரு பொதுஇடத்தில் வைத்து நடத்தினல் எல்லாரும் வந்து கேட்பதற்கு எவ்விதத்தடையும் இராதென்பதுபற்றியும் எவ்விதஅஸௌகர்யத்தாலும் இந்த ஸத்கதாப்பிரஸங்கம் தடைப் படாமல் நடக்குமென்பதுபற்றியும் இதனைக் கோயில் முதலிய பொதுஇடங்களில் படித்து வந்திருக்கலாம்.

(4) கும்பகோணம், மஹாவித்வான் மத்வசாஸ்திர ஸம்பூர் ணர் பாரதஸிம்மம் ப்ரம்மஸ்ரீ கா. பெ. ராமசந்திராசாரியாரவர்க ளுடைய பெருமையைப்பற்றியும் அவர்கள் இந்த மஹாபாரத விஷயமாக எனக்குச் செய்திருக்கிற பேருதவிகளைப்பற்றியும் ஆச்வ மேதிகபர்வம் வனபர்வ இரண்டாம்பாகம் உத்யோகபர்வம் ஆகிய இவற்றின் முகவுரைகளில் தெரிவித்திருக்கிறேன். மஹாபார தத்தைப் படிக்கவேண்டிய முறை எப்படியென்று அவர்களைக் கேட்டபோது, அவர்கள், 'முதலிலிருந்து கடைசிவரை தொடர்ச்சி யாகப் படிப்பதுதான் பரம்பரையான வழக்கம்; நானும் அப்படியேதான் செய்துவருகிறேன்.' என்று சொன்னர்கள். ஸ்ரீ பாகவதத்தை 'ஸப்தாஹம்' என்று ஏழுநாளில் படிப் பதுபோலவும், ஸ்ரீமத் ராமாயணத்தை 'நவாஹம்' என்று ஒன் பதுநாளிலும் 'புனர்வஸு பட்டாபிஷேகம்' என்று இருபத் தேழுநாளிலும் படிப்பதுபோலவும், மஹாபாரதத்தை நாற்பது தினங்களில் படிக்கும் ஒரு முறை உண்டென்றும் சொன்னர்கள்.

இவர்கள் மஹாபாரதம்முழுதும் தம் வீட்டில் பலமுறை படித்திருக்கிருர்கள். மற்றும் பலவீடுகளில் பலமுறை படித்துப் பொருள் சொல்லியிருக்கிருர்கள். மஹாபாரதப் பிரசாரத்தின லேயே இவர்கள் பெருமையையும் புகழையும் பொருளையும் பெற்றிருக்கிருர்கள். இவர்களுடைய மூத்தகுமாரர் ஸ்ரீமான்,

Dr. R. நாகராஜ சர்மா அவர்கள் ஆங்கில பாஷையிலும் ஸம்ஸ்கிருத பாஷையிலும் மிக்க புலமைவாய்ந்தவர்கள். இளைய குமாரர் ஸ்ரீமான், சுதர்சனசர்மா அவர்கள் ஸம்ஸ்கிருத பாஷையில் மிக்க பாண்டித்தியம் உடையவர்கள்; ஸாஹித்யசிரோமணி பரீக்ஷையில் தேறினவர்கள். இந்த இரண்டு குமாரர்களும் தக்கவர்களால் மிக நன்கு மதிக்கப்பெற்றவர்கள். பிதாவும் புத்ரர்களும்,

"தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்"

"மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்"

என்னும் திருக்குறள்களுக்கு இலக்கியமாக விளங்குகிறார்கள்.

ஐரோப்பாக்கண்டத்திலுள்ள கீழ்த்திசைப் பாஷா நிபுணர்கள் பலர், மஹாபாரதத்தை எழுத்தெண்ணிப்படித்து ஆராய்ச்சி செய்து அதிலிருந்து பல அரியவிஷயங்களை வெளியிட்டிருக்கிறார்கள்; மஹாபாரதத்தின் பெருமையைப் பலபடப் புகழ்ந்து எழுதுகிறார்கள். இதன்விவரத்தையும் 'மஹாபாரதமும் திராவிட பாஷைகளும்' என்னும் புஸ்தகத்தில் பரக்கக்காணலாம்.

இங்ஙனம் பலவகையாலும் சிறப்புவாய்ந்ததும் ஐந்தாம் வேதமென்று கொண்டாடப்படுவதுமான மஹாபாரதத்தைத் தூஷிக்கிறவர்களைப்பற்றி நான் என்ன சொல்வது? அவர்கள், அதனால் ப்ரதிபாதிக்கப்படுகிறவனும், 'ஹாரநாராயணா ஹரிர்வா யழு' என்கிறபடி அதனின்றும் வேறாகாதவனுமான பகவானையே தூஷிப்பவர்களாவார்கள். அவர்களுக்கு நல்ல அறிவை அளித்தருளும்படி எல்லாம்வல்ல கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

என்னிடத்துள்ள குற்றங்குறைகளுக்கு அளவே இல்லை. அவைகளை யாரேனும் சொல்லுவார்களானால் அவர்கள் உண்மை சொன்னார்களென்று நினைத்துப் பொறுத்துக்கொண்டு அவைகளை நீக்கிக்கொள்ளுதற்கு இயன்றவரை முயலுவேன். சிலர் மஹாபாரதத்தையும் சிலர் சாந்திபர்வத்தை மொழிபெயர்த்து உதவிய பெரியோர்களையும் நிந்தித்தார்களென்று கேட்டமையாலும் அவர்களுக்கு ஸமாதானம் கூறுவது என் கடமையென்று தோன்றினமையாலும் இவ்வளவு எழுத நேர்ந்தது. பொறுத்தருளும் வண்ணம் பெரியோர்களை ப்ரார்த்திக்கிறேன்.

## நான் அடையும் நன்மைகள்.

மஹாபாரத மொழிபெயர்ப்பை வெளியிடத்தொடங்கியதில் நான் அடைந்த நன்மைகள் பல. அது, ஒன்றுக்கும்பற்றாத என்னை உலகம் அறியச்செய்தது; உலகமுள்ளளவரையில் என்றும் அழியாத பெரும்புகழை எனக்கு அளித்தது. இந்தக்காரியம் பூர்த்தியான பிறகு என்மனம் ஆனந்தவெள்ளத்தில் திளைத்தாடுகின்றது. 'இதனைச் செய்யத்தொடங்கியதில் நீ மிக்க ஶ்ரமங்களை அடையவில்லையா?' என்று என்னைச் சிலர் கேட்கக்கூடும். தாங்கமுடியாத ஶ்ரமமே இருந்ததென்பதும் இப்பொழுதும் இருக்கிறதென்பதும் உண்மையே. ஸாதாரணமாக எந்தப் பெருங்காரியத்தைச் செய்வதும் ஶ்ரமம்தான். பல தக்க பண்டிதர்களையும் உதவிக்காக மற்றும் பலரையும் வைத்துக்கொண்டு பலவருஷங்களில் செய்யக்கூடிய பெருங்காரியமாதலாலும், அதிகமான பொருளுதவி வேண்டினமையாலும், கிடைத்த உதவி போதாமையாலும் ஶ்ரமம் அதிகமாகவே இருந்தது. நமது நாட்டார் தாம் செய்யவேண்டிய உதவியைச் செய்யக்கூடிய அளவு செய்திருப்பார்களானால் எனக்கு இவ்வளவு ஶ்ரமம் நேர்ந்திராது. பிந்திக்கிடைத்த உதவிகள் முந்திக்கிடைத்திருந்தாலும் இவ்வளவு ஶ்ரமம் இருந்திராது. வனபர்வ இரண்டாம்பாக முகவுரையிலும் மற்றும் பலபர்வங்களின் முகவுரைகளிலும் நான் தெரிவித்திருக்கிற சில பரமோபகாரிகள் மனமுவந்து உதவிபுரிய முன்வந்திராவிட்டால் இந்த அரியபெரியநற்காரியம் இம்மட்டிலாவது பூர்த்தி அடைந்திராது. அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியறிதலை இங்கும் தெரிவிக்கிறேன். அவர்களுக்கு எல்லா நன்மைகளையும் மேலும் மேலும் அளித்தருளும்படி எல்லாம்வல்ல கடவுளை ப்ரார்த்தித்துக்கொண்டே யிருக்கிறேன்.

காரியம் நடைபெறுங்காலத்தில் அளவில்லாத ஶ்ரமத்தை அடைந்ததல்லாமல் காரியம் பூர்த்தியான பிறகும் கவலைப்படும்படியாகச் செல்லும்வகைகள் இருந்தாலும், பல லட்சங்கள் பொருள்தேடிக் குவித்துவைத்திருந்தால் அடையக்கூடுமென்று எதிர்பார்க்குந் திருப்தியைக்காட்டிலும் பலமடங்கு அதிகமான திருப்தியை இந்தக்காரியம் பூர்த்தியானதில் நான் அடைகிறேன். என் குடும்பத்தாரும் அப்படியே நினைக்கிறார்கள். ஸ்ரீமஹாபாரத புஸ்தகத்தில் இன்னும் 200 பிரதிகள் செல

வாகுமானால் எனக்கு இருக்கிற கவலைமுழுதும் நீங்கிவிடும். தமிழ் நாட்டிலும் வேறுதேசங்களிலும் இதர தீவுகளிலுமுள்ள தமிழ் மக்களின் பெருந்தொகைக்கு இந்தச் சிறுதொகை மேருவுக்கும் ஓரணுவுக்கும் அல்லது கடல்நீருக்கும் ஒரு திவலைக்குமுள்ள அளவு கூட ஒப்புச்சொல்லமுடியாது. இதுவரை நடத்தி நிறைவேற்றி யருளிய கடவுள் மிச்சமுள்ள சிறுகவலையையும் விரைவில் நீக்கி அருள்வானென்றே நம்பிக்கொண்டிருக்கிறேன்.

'கடவுள் ஒருவன் உண்டு. அவனே உலகமனைத்தையும் காக்கிறான். அவன் என்னையும் கைவிடான்' என்பதில் எனக்கு உறுதியான நம்பிக்கை இருக்கிறது. அவன் என்னைக் கைவிடாமல் காக்கிறானென்பதற்குரிய அடையாளங்களை நான் அப்போதப்போது காண்கிறேன். முன்னம் அறியாத இடங்களிலிருந்து, நான்பாராமலும் கேளாமலும், உதவிகிடைத்துவருகிறது. அப்படிப்பட்ட உதவிகள் பல ஸமயங்களில் நேர்ந்ததுஉண்டு. அதற்குக் கடவுளுடைய திருவருள்தவிர வேறு காரணம் இருப்பதாக நான் நினைக்கவில்லை.

தற்காலம் கிடைத்துவருகிற ஒரு பேருதவியை என்னவென்று சொல்லுவேன்! கடவுள் தோன்றாத் துணையாயிருந்து காப்பாற்றுகிறானென்பதற்கு இதுவே தக்க நிதர்சனமாம். தேசாந்தரத்திலுள்ள ஒரு பரமோபகாரி எனக்குச் சில மாதங்களாக உபகாரச் சம்பளம் அளித்து வருகிறார்கள். நான் அவர்களைப் பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை. நம்மவர்களில் இப்படி உபகாரம் செய்யக்கூடியவர்கள் இருப்பார்களென்று நான் எதிர்பார்த்ததுமில்லை. சென்ற மேமீ 3௳ காலையில், நான் ஒரு நண்பரோடு வார்த்தை சொல்லிக்கொண்டிருந்தேன். அப்போது, நான் அடைந்த பல ப்ரமங்களையும் சொல்லிவிட்டு, 'கிடைத்ததைக் கொண்டு ஜீவனம் செய்துகொண்டும் நல்ல காவியங்களைப் படித்துக்கொண்டும் இனிது பொழுதுபோக்கிவந்த என்னைக் கடவுள் இந்தப் பெரிய காரியத்தில் இழுத்துவிட்டுப் பலபல துன்பங்களுக்கு உள்ளாக்கிவிட்டார்' என்று சொல்லிக்கொண்டிருக்கையில், ஒரு கடிதம் வந்தது. அதில், மஹாபாரதத்தில் 6 பிரதிகள் அனுப்பும்படி ரூ. 300-க்கு ஒருசெக்கு (Cheque) வந்தது. அதைத் தவிர, பின்வரும் விஷயமும் எழுதியிருந்தது:

‘* * * * * * *

*23rd April, 1932.*

DEAR MR. RAMANUJACHARIAR,

* * * * * * * *

I offer you my hearty congratulations on the completion of the Mahabharata. Your difficulties, anxieties and troubles must have been very very great and now you may enjoy your well deserved rest. In order that you may be free from financial worries and that you may be kept above physical wants, I have instructed my bankers to remit you Rs. 25 p.m. on the 1st of every month for your life time commencing from the 1st May, 1932. I pray that God may bless you with a long life.

Yours very sincerely,

* * *

*P.S.*—I like to remain incognito and would request you not to publish my name in print.’

அதைப் பார்த்தவுடன், நான் அடைந்த தன்மையை உடனிருந்த நண்பரும் ஸர்வஸாக்ஷியான கடவுளுமே அறிவர். நான் கடவுளை நொந்துகொண்டிருந்தபோது இந்த நற்செய்தி வந்தமையால், கடவுளே நேரில் வந்து, ‘நான் இருக்கிறேன். உன்னைக் கைவிடமாட்டேன்’ என்று உறுதிகூறியதாக நினைத்தேன். கடவுளுக்குப் பல்லாண்டு கூறினேன். அந்தக் கடிதத்தைக் கண்ணில் ஒற்றிச் சிரமேல் வைத்துக்கொண்டேன். இந்த உபகாரத்தை நான் எதற்கு ஒப்புச்சொல்வேன்? இந்த மஹாபுருஷருக்கு என்மீதுள்ள அவ்யாஜமான அன்பும் ஸ்ரீமஹாபாரதத்திலுள்ள அபிமானமும் பின்வரும் கடிதங்களாலும் நன்கு விளங்கும்.

* * * *

‘* * * * *18—10—32*

MY DEAR SIR,

I trust you are receiving the monthly remittances from Messrs. Thomas Cook & Sons regularly. I shall be glad to be informed at any time when there is any delay so that I may set things right, if need be.

Yours most affectionately,

* * * *

' * * * *

* * * 14—11—32.

MY DEAR SIR,

I am enclosing herewith a copy of a photo of mine. I had no photos of mine at all and yesterday a friend took one for you.

Kindly send me per V.P.P. one complete set of the Tamil Mahabharatha. This is required for a friend of mine * * *

Yours most affectionately,

* * * *,

இந்த மஹோபகாரியினுடைய பேருதவிக்கு எதை ஒப்பிடுவதென்று எனக்குத் தெரியவில்லை. கற்பக விருக்ஷம் கேட்டதைக் கொடுக்கும்; சிந்தாமணி நினைத்ததைக் கொடுக்கும். கேளாமலும் நினையாமலும் கொடுக்கும் ஒன்றை என்னவென்று சொல்வது! இப்படிப்பட்ட குணநிதியை உலகம் அறியும்படி செய்வது எனது கடமையாகும். நான் இவர்களைத் தக்க இடத்தில் வைத்து இவர்களுடைய புகழ் உலகமுள்ள வரையில் நிற்கும்படி செய்ய எல்லாம்வல்ல இறைவன் இனிது அருள்புரியவேண்டும்.

ஸ்ரீ மஹாபாரத ஸம்பந்தமாக எனக்குக் கிடைத்திருக்கிற நற்சாக்ஷிப் பத்திரங்களாலும் ஸமாசார பத்திரிகைகளில் வெளிவந்திருக்கிற மதிப்புரைகளாலும் மற்றும் சில விவரங்கள் வெளியாகலாம். இந்தப் பெருமைகளெல்லாம் எனக்குக் கிடைத்தது ஸ்ரீமஹாபாரதத்தினாலன்றோ! இந்த மஹாபாரதப் பதிப்பே பல தக்கவர்களுடைய பழக்கங்களையும் பல நன்மைகளையும் நான் அடையக்காரணம் ஆயிற்று. அவைகளை நானே தெரிவிப்பது முறையன்றாதலால் இம்மட்டோடே நிறுத்துகிறேன்.

மஹா பாரதத்தினால் நன்மை அடைந்தவர்களுள் நானும் ஒருவனாதலாலும், அந்த முறையில் எனது சொந்த அனுபவத்தைத் தெரிவித்தல் அவசியமாதலாலும், உண்மை பேசுதல் குற்றமாகாதென்னும் துணிபினாலும், இங்ஙனம் என்னைப்பற்றியும் தெரிவிக்கலானேன். பொறுத்தருளும்படி பெரியோர்களை மிகவும் ப்ரார்த்திக்கிறேன்.

## சில பொருத்தங்கள்.

ஸ்ரீ மஹாபாரதத்திற்கு, ஸகல ஞானத்தையும் தருதலால் ஐந்தாம்வேதமென்றும் ஜயத்தைத் தரத்தக்கதாதலால் 'ஜயம்' என்றும் பெயர்கள் வந்திருக்கின்றன. 'ஜ' முதலெழுத்தாகவும் 'ய' கடையெழுத்தாகவும் அமைந்ததும், பதினெட்டு எழுத்துக்களாலானதுமான (1) ஒரு மஹாமந்திரத்தினுடைய விவரணம் மஹாபாரதமென்றும், அதன் முதல் எழுத்தையும் கடைஎழுத்தையும் சேர்த்து (2) 'ஜய' என்று இதற்குப் பெயர் அமைக்கப் பட்டதென்றும் பெரியோர் கூறுவர். இந்த, 'ஜய' என்பதற்கும் கணிதசாஸ்திரத்திற் சொல்லிய கடபயாதி முறைப்படி பதினெட்டு என்பதுபொருள். (3) பதினெட்டுப் பர்வங்களையுடையதும் (4) பதினெட்டு அக்ஷௌஹிணி சேனைகளுக்கு நடந்த (5) பதினெட்டு நாள் போரைத் தெரிவிப்பதும் (6) பதினெட்டு அத்யாயங்களையுடைய பகவத்கீதையைத் தன்னகத்துக் கொண்டதுமான இந்த மஹாபாரதத்திற்கு மூலமந்திரம் பதினெட்டு எழுத்துக்களுள்ளதாயிருப்பதும் பதினெட்டு என்று பொருள் தரும்படியான 'ஜய' என்பது பெயராக அமைந்திருப்பதும் அறிவுடையோர் நுணுகி ஆராய்ந்து வியக்கத்தக்கவை.

இவையல்லாமல், நமது மொழிபெயர்ப்பின் கடைசிஸஞ்சிகையாகிய 45-வது ஸஞ்சிகை 1932ளு பிப்ரவரிமீ 17உ வெளிவருமென்று ஹிந்து பத்திரிகையில் 15, 17, 19 ஆகிய மூன்று தினங்களில் பிரசுரித்திருக்கிறது. அந்த 17-ம் தேதியில் வெளியிடக்கூடாமல் 18உ தான் அந்த ஸஞ்சிகை அச்சுக்கூடத்திலிருந்து என்னிடம் வந்துசேர்ந்தது. ஆதலால், பிப்ரவரிமீ (7) 18உ கடைசிஸஞ்சிகை வெளிவந்தது. ஸ்ரீ மஹாபாரதம் பூர்த்தியானதற்காக, கும்பகோணம் போர்ட்டர் டவுன் ஹாலில் நடந்த ஸந்தோஷக்கொண்டாட்டத்தை முதலில் மார்ச்சுமீ 12உயிலும், பிறகு 14உயிலும் நடத்த நினைத்தார்கள். அப்படி நடத்தப்படாமல் 18உயே நடைபெறும்படி தெய்வாதீனமாக நேர்ந்தது. ஒரு கேஸ் ஸம்பந்தமாகக் கும்பகோணம் ஸப்கோர்ட்டில் 18உ விசாரணைக்குத் தேதி குறிப்பிட்டிருந்ததாலும், அதற்காக, சென்னையிலிருந்து ஸ்ரீமான், V. V. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் அவர்களும் ஸ்ரீமான், K. V. கிருஷ்ணஸ்வாமிஐயரவர்களும் வருவதாயிருந்ததாலும், இரண்டு கனவான்களும் இந்த மஹா

பாரதப்பதிப்புவிஷயத்தில் மிக்க அபிமானமுடையவர்களாதலா லும், அந்த ஸமயம் வைத்துக்கொள்ளலாமென்று நிச்சயித்தார் கள். அந்தப்படியே அது (8) 18உ நடைபெற்றது. சென்னை ஸம்ஸ் கிருதஸேவாஸமிதியார் மயிலாப்பூர் ஸம்ஸ்கிருதகாலேஜ்தோட்டத் தில் மஹாபாரத மொழிபெயர்ப்புப் பூர்த்தியானதற்காக நடத்திய ஸந்தோஷக்கொண்டாட்டத்திற்கும் ஒருவாறு பதினெட்டின் ஸம் பந்தம் இல்லாமற்போகவில்லை. அது நடந்ததினம் இங்கிலீஷ் ஏப் ரல்மாதம் 15உயும் தமிழ்ச் சித்திரை மாதம் 3உயும் சேர்ந் தது. அந்த இரண்டும் சேர்ந்து (9) பதினெட்டாகும். அன்று ஸ்ரீராமநவமியும் ஆயில்ய நக்ஷத்திரமும் சேர்ந்த தினமு மாம். நமது தேசத்தில் திதியினாலும் நக்ஷத்திரத்தினாலும் நாட்களைக் கணக்கிடுவது வழக்கமாயிருப்பதற்கேற்ப இங்கே திதியும் நக்ஷத்ரமும் சேர்ந்து பதினெட்டைக் குறிக்கும். நவமியா னது திதியில் ஒன்பதாவது; ஆயில்யம் நக்ஷத்ரத்தில் ஒன்பதாவது. இரண்டும் சேர்ந்து (10) பதினெட்டு ஆகும். அக்கழகத்தார் எனக்கு உபசாரப்பத்திரம் படித்துக்கொடுத்துப் பட்டமளித்தது ஹிந்துபத்திரிகையில் ஏப்ரல் மாதம்(11)18உதான் வெளிவந்தது.

மேலும், நான் மஹாபாரதமொழிபெயர்ப்பைத் தொடங்கிய பொழுது வேலைபார்த்தது, கும்பகோணம் நேடிவ் ஹைஸ்கூலில். அதில், 1893 - ம் ஸ்ரீ முதல் 1910 - ம் வருஷம் முடிய (12) பதினெட்டு வருஷம் இருந்தேன். மஹாபாரத வேலையைத் தொடங்கி நடத்துவதற்கு ஆதாரமாக இருந்த வீடு, கும்ப கோணத்தில், மஹாவித்வான் பரம்மஸ்ரீ மஹாமஹோபாத்யாய, தாக்ஷிணாத்யகலாநிதி, டாக்டர், வே. சாமிநாத ஐயரவர்க ளுடையது. அதில், 1904-ம் ஸ்ரீ முதல் 1921-ம் வருஷம் முடிய (13) பதினெட்டு வருஷம் குடியிருந்தேன். 1908-ம் ஸ்ரீ முதல் 1932-ம்வருஷம் வரையில் 24 வருஷங்களில் ஸ்ரீ மஹாபாரதப் பதிப்பு முடிவுஅடைந்ததானாலும், ஐரோப்பியயுத்தம் காரணமாக 6 வருஷம் தடைப்பட்டு ஸஞ்சிகை வெளிவந்தகாலம் (14) பதி னெட்டு வருஷமே ஆகும். ஸ்ரீ மஹாபாரத மொழிபெயர்ப்பைச் செய்யலாமென்று சில நண்பர்கள் சொல்ல, அந்தப்படி நிச்ச யித்து, முன்னதாகச் செய்யக்கூடிய வேலையைச்செய்ய முதலில் 1905-ம் வருஷம் தொடங்கினேன். அதுமுதல் நடந்துவந்து, 1932-ம் வருஷத்தில் பூர்த்தியாயிற்று. இவற்றுக்கு இடையில் 27 வருஷங்களாயின. இருபத்தேழு வருஷங்களுக்கும் 324 மாதங்

களாகின்றன. ஆகவே, பதினெட்டுப் பர்வங்களும் 324 மாதங்களில் நிறைவேறின. இம்முறையில் அவை ஸராஸரி (15) பதினெட்டு மாதங்களுக்கு ஒருபருவம்வீதம் பூர்த்தியாகியிருக்கின்றன.

என் முழுப்பெயரை, 'மணலூர் வீரவல்லி இராமானுஜாசாரியன்' என்று எழுதுவது வழக்கம். அதில் அடங்கிய எழுத்துக்கள் (16) பதினெட்டு. என்னுடைய பெயரின் முதலெழுத்து இங்கிலீஷில் 'R' என்பது. அது அந்த அக்ஷரவரிசையில் (17) பதினெட்டாவது. இவையல்லாமல், இன்னும் ஒரு ரகசியமும் வெளியிடுவேன். எம்பெருமான் இந்த மஹாபாரதத்தை வெளியிட வியாஜமாகக் கொண்ட என்னுடைய ஜன்மநக்ஷத்ரம் கேட்டை. அது (18) பதினெட்டாவது நக்ஷத்ரமாகும்.

மேற்கூறியவை பதினெட்டின் ஸம்பந்த முடையனவாக இருக்கவேண்டுமென்று ஒருவரும் கருதிச் செய்தவையல்ல; தாமாகவே அமைந்தவை. இன்னும் நுணிகி ஆராய்ந்தால் பின்னும் சில பதினெட்டுக்கள் கிடைக்கலாம். ஆனாலும், மஹாபாரதத்திற்குப் பதினெட்டு ஏற்ற எண்ணுதலால் பொருத்தங்களும் பதினெட்டே போதுமென இவ்வளவோடு நிறுத்துகிறேன். இப்படிப்பலவிதத்திலும் பதினெட்டின் பொருத்தம் அமைவது தெய்விகம் என்றே நினைக்கிறேன்.

மஹாபாரதத்தில் தமிழ்ச் சொல்லாக வழங்குவனவற்றுள் முக்கியமானது, 'மணலூர்' என்பது. அந்தப்பெயரையுடைய ஊரிலும் மஹாபாரதத்திற்குப் பொருந்திய எண்ணுன பதினெட்டாவது நக்ஷத்ரமாகிய கேட்டையிலும் அடியேனைப்பிறப்பித்ததனால், மஹாபாரதத் தமிழ்மொழிபெயர்ப்பை அடியேனைக் கொண்டே நிறைவேற்றுவதென்பது எல்லாம்வல்ல எம்பெருமானுடைய திருவுள்ளம் போலும். அடியேன் செய்யக் கருதியிருக்கும் மற்ற நற்பணிகளையும் இனிது நிறைவேற்றியருளும் வண்ணம் அவனது திருவடித்தாமரைகளைச் சிந்தித்து வணங்குகிறேன்.

மேலே கூறியவற்றுள் பெரும்பாலன ஸ்ரீமஹாபாரதம் பூர்த்தியானபிறகே நிச்சயிக்கக்கூடியவையாதலாலும் கடைசிப் புஸ்தகம் பூர்த்தியாகி வெளிவந்தபிறகு இந்தப் பர்வமே புதிய பதிப்பாக வெளிவந்து முகவுரை எழுதப்படுவதாலும் இவை இங்கே வெளியிடப்பெற்றன.

மறைந்துபோன திவ்யப்ரபந்தமாகிய தமிழ்வேதம் இவ்வூரில் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீ ஆராவமுதப் பெருமாளால் வெளி வந்ததென்றும், அதனால் அவருக்கு, 'ஆராவமுதஆழ்வான்' என்று திருநாமம் வழங்கலாயிற்று என்றும் சொல்லுவர். ஐந்தாம் வேதமாகிய இந்த மஹாபாரதம் தமிழில் வெளிவரத் தொடங்கியதும் இவ்வூரிலேயே. நான் இடையில் பலவிடங்களுக்குச் சென்றிருந்தும் திரும்ப இவ்வூரிலேயே வந்து இந்த மஹா பாரதம் பூர்த்தியானது, அந்த ஆராவமுத ஆழ்வானுடைய பரம கிருபையாலே என்பது நன்கு விளங்குகிறது.

ஆரா வமுதே! அடியே னுடலம் நின்பா லன்பாயே
நீரா யலைந்து கரைய உருக்கு கின்ற நெடுமாலே!
சீரார் செந்நெல் கவரி வீசும் செழுநீர்த் திருக்குடந்தை
ஏரார் கோலம் திகழக் கிடந்தாய்! கண்டேன் எம்மானே!

ஓராயிரமாய் உலகேழளிக்கும்
பேராயிரங் கொண்டது ஓர்பீடுடையன்
காராயின காளநன் மேனியினன்
நாராயணன் நங்கள் பிரானவனே.

(திருவாய்மொழி)

கும்பகோணம், 1-1-1933.

இங்ஙனம்,
ம. வீ. இராமானுஜாசாரியன்.



குறிப்பு.—Justice Telang அவர்கள், ஸ்ரீ மஹாபாரதத்துக்கு வ்யாக்யானம் செய்திருக்கிற நீலகண்டரைப்பற்றி, "Whatever his merits as an exegete, and even these are marred by a persistent effort to read his own foregone conclusions into the text he comments on." (P. 203 of The Sacred Books of the East, Edited by Max Muller, Vol. VIII) என்று எழுதியிருப்பது, மஹா வித்வான் ப்ரம்மஸ்ரீ, வேதாந்த கேஸரி, மஹா மஹோபாத்யாய, பைங்காநாடு கணபதி சாஸ்த்திரிகளவர்களுடைய அபிப்பிராயத்தை நன்கு வற்புறுத்தும். இதன் 7-வது பக்கம் மூன்றாவது வரியில் பார்க்க.

ஸ்ரீ꞉

# மூன்றாம் பதிப்பின் முகவுரை.

ஸ்ரீராமாயணத்தில் ஸுந்தரகாண்டம்போல, ஸ்ரீமஹாபாரதத்தில் மிக முக்கியமானது, இந்த விராடபர்வமாகும். மஹாபாரதத்தை ஒரு விருக்ஷமாக உருவகம்செய்து, அதற்கேற்ப, பல பர்வங்களையும் அம்மரத்தின் பல உறுப்புகளாகக் கூறுமிடத்து, இந்த விராடபர்வத்தை அதன் * ஸாரமாகக் கூறியிருத்தலே, இதன் சிறப்பை நன்குவிளக்கும். பெரியோர்கள் தமது இஷ்டஸித்திக்காக இந்தப்பர்வத்தைப் பாராயணம் செய்வதுண்டு. மற்றக்காலங்களைக் காட்டிலும், மழையில்லாதகாலத்தில் இதனையே படித்து வருகிறார்கள். பாண்டவர்களுக்கு ஒருவருக்கொருவரிடமுள்ள அன்புடைமையும், நன்னம்பிக்கையும், அவர்களுடைய நன்றியறிதலும், யுதிஷ்டிரர் குறிப்பை அறிந்து மற்றப் பாண்டவர்கள் நடத்தலும், த்ரௌபதியின் கற்புடைமையும், யாரும் தேசகாலங்களுக்கு ஒத்துநடக்க வேண்டுமென்பதும், அடாது செய்தவர் படாது படுவர் என்பதும், பொறுத்தார் அரசாள்வர் என்பதும் முதலிய பலவிஷயங்கள் இந்தப்பர்வத்தில் நன்கு விளங்கும். இதில், தௌம்யர் பாண்டவர்களுக்கு நற்புத்திக் கூறுமிடம் படிப்பவர் மனத்தைக் கவரத்தக்கது.

இத்துணைச் சிறப்புவாய்ந்த இந்த விராடபர்வம் முதன்முறை 1912-ம் வருஷத் தொடக்கத்தில் வெளியிடப்பட்டது. அது ஸம்பந்தமானயாவும் இதன் பின்னுள்ள அதன் முகவுரையால் நன்கு விளங்கும். இதன் இரண்டாம் பதிப்பு 1918-ம் வருஷத் தொடக்கத்தில் வெளிவந்தது. ஸ்ரீமஹாபாரதத்தை மொழிபெயர்த்துப் பதிப்பித்தலாகிய பெருங்கார்யத்திற்குத் தக்கபடி ஸௌகர்யங்களை முன்னதாக அமைத்துக்கொண்டு தொடங்காமையால், எல்லாப் பர்வங்களிலும், அப்போதப்போது ஸௌகர்யத்திற்குத் தக்கபடி சிலசில பிரதிகளே அச்சிடப்பட்டமையாலும், இந்தப் பதிப்புவேலையைத் தொடங்கிப் பதினேழு வருஷங்களுக்கு மேலானமையாலும் இடையிடையே பல ஸஞ்சிகைகள் குறைவுபட்டன. பிரகடனபத்திரிகையில், 'இதுவரையில் பதினொருபர்வங்கள் பூர்த்தியாகி விலைக்குக் கிடைக்கும்' என்று கூறப்பட்டிருப்பினும், எல்லாப் பர்வங்களையும் சேர்த்துக் கொடுப்பதற்கு ஒருபோதும் நேரவில்லை. ஒருஸமயம் இருந்த புஸ்தகம் ஒருஸமயம் இருந்ததில்லை. சிலர், ஒரே புஸ்தகத்திற்குப் பலமுறை எழுதியதுண்டு. படிப்பவர்களுக்கு வேண்டும்போது புஸ்தகம் கிடைக்கவில்லையென்றால் அவர்

---

* ஸ்ரீமஹாபாரதம், ஆதிபர்வம் 11-ம் பக்கம் பார்க்க.

'விராடோத்யோக ஸாரவாந்' என்று வடமொழி மஹாபாரதம் கூறுகிறது.

களுக்குள்ள ஊக்கம் பெரிதும் குறைகிறது. ஆகையால், கையிலில்லாத பழைய ஸஞ்சிகைகளை அச்சிட்டுக் கொடுத்தலும், புதிய ஸஞ்சிகையை வெளியிடுவதுபோலவே, அவசியமாயிற்று. புதிய ஸஞ்சிகை வேலையோடு பழைய ஸஞ்சிகையின் இரண்டாம் பதிப்பு வேலையையும் சேர்த்து நடத்த இயலாமையால், நான் மனத்தளர்ச்சியுற்று வேலையை நடத்தாமலிருந்ததை அறிந்து, பரம ஆப்தர்களும் லோகோபகாரமான இந்த உத்தம கைங்கரியத்தைத் தலைக்கட்டிவைப்பதில் மிக்க ஊக்கங்கொண்டிருப்பவர்களுமான ஸ்ரீமான் ராவ்பகதூர் V. T. கிருஷ்ணமாசாரியரவர்கள், C. I. E., பல நண்பர்களுடன் கலந்து ஆலோசித்து, இந்த மஹாபாரதப் பதிப்பைப் பூர்த்தி செய்தற்கு இன்றியமையாத ஸௌகர்யங்களைச் செய்துவருகிறார்கள். அவர்கள் இந்த மஹாபாரத மொழிபெயர்ப்பை வடமொழி மஹாபாரதத்தோடு ஒப்பிட்டுப் பார்த்து மிக்க ஶ்ரத்தையுடன் படித்து வருபவர்களாதலால், இதனை விரைவில் அச்சிட்டுப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பம் அவர்களுக்கு மிகுதியாயிருக்கிறது. ஸ்ரீமஹாபாரத சம்பந்தமான பதிப்புவேலை முழுமையும் சில மாதங்களில் பூர்த்திசெய்துவிடவேண்டுமென்று தாங்களாகவும் தங்களுடைய நண்பர்கள் மூலமாகவும் அவர்கள் என்னை அடிக்கடி தூண்டி எனக்கு ஊக்கம் அளித்து வருகிறார்கள். இந்தத் தருமசீலர்கள் ஸ்ரீமஹாபாரத கைங்கர்யத்தை ஆதரித்து நடத்திவருகிற முறையைப் பின்னர் விவரமாகத் தெரிவிப்பேன்.

இந்தப் பரமோபகாரிகள் மனமுவந்து செய்துவருகிற பேருதவியினாலேயே, பழைய ஸஞ்சிகைகளில் பல இரண்டாமுறை பதிப்பிக்கப்பெற்றன; அந்த முறையில் இந்த விராடபர்வமும் இப்பொழுது பூர்த்தியாயிற்று. புதிய ஸஞ்சிகை வேலையும் விரைவாக நடந்துவருகிறது. அவர்களுடைய பேருதவியால், பல வருஷங்களாக நடந்துவருகிற இந்த அரியபெரிய நற்கார்யம் சில மாதங்களில் பூர்த்தியாகுமென்றே நம்புகிறேன். எல்லாம் வல்ல ஸர்வேஶ்வரன் தோன்றாத்துணையாக நின்று நிறைவேற்றியருளுக.

இந்த மஹாபாரதப் பதிப்புவிஷயத்தில், இவ்வளவு ஶ்ரத்தை எடுத்துக்கொண்டிருக்கிற இந்தப் பரமோபகாரிகளுக்கு மஹாபாரத ப்ரதிபாத்யனான ஸ்ரீகண்ணபிரான் எல்லா நன்மைகளையும் அளித்தருளுக. இங்ஙனம் பிரார்த்தித்தலன்றி நான் அவர்களுக்குச் செய்யும் கைம்மாறு யாதுளது? உலகுள்ளளவும் அவர்கள் புகழ் நின்று நிலவுக.

மணலூர்,
நரசிங்கன்பேட்டை, S. I. R.
2—3—1926

இங்ஙனம்,

ம. வீ. இராமானுஜாசார்யன்.

ஸ்ரீ:

# முதற்பதிப்பின் முகவுரை.

---

பல அரியவிஷயங்களைத் தன்னிடத்துக்கொண்டிருக்கிற இந்தப் பெருநூலை வடமொழிக்கு ஸரியாக மொழிபெயர்த்து வெளியிடுவதிலுள்ள ஶ்ரமம், அறிவுடையோர்களுக்குத் தெரிந்ததேயாதலால், நான் இங்கு அதனை அதிகமாக விவரிக்கவில்லை. இவ்விஷயத்தில் எனக்கு உண்டான கவலை எல்லையில்லாமலிருந்தது. அது ஸ்ரீ கண்ணபிரானுடைய திருவருளால் ஒருவாறு நீங்கித் தைர்யம் அடைகிறேனென்பதைக்கேட்கிற ஆஸ்திகஸஜ்ஜனர்கள் த்ருப்தியடைவார்கள். மொழிபெயர்ப்பு அனேகமாய்ப் பூர்த்தியாயிற்றென்றே சொல்லலாம். உலகத்தில் வழங்கும் பல பாஷைகளிலுமுள்ள நூல்களுள்ளும் இவ்வளவு பெரியதும் அரியதும் ஹிந்துமதஸம்பந்தமான எல்லா விஷயங்களையும் தெரிவிப்பதுமான நூல் வேறில்லை என்பது எழுத்தாலும் சொல்லாலும் எல்லாரும் ஒப்புக்கொண்டது. எதிர்பாராத பல அஸௌகர்யங்களால் சிலசில ஸமயங்களில் ஸஞ்சிகைகள் காலத்தில் வெளிவராமற் போயின. பெரியோர்கள், கார்யத்தின் ஶ்ரமத்தையும் பெருமையையும் உத்தேசித்து க்ஷமிப்பார்களென்று நம்புகிறேன். இனி, ஸஞ்சிகைகளைக் காலத்தில் வெளியிடவேண்டுமென்று மிக முயற்சிசெய்து வருகிறேன்.

இந்த மஹாபாரதம் பூர்த்தியானபிறகு, விரிவான முகவுரையொன்று எழுதப்பெறுமாகையால், இந்தப் பெருங் கார்யத்துக்கு வேண்டிய உதவிகளைச்செய்து ஆதரித்துவருகிற வித்வான்கள் பிரபுக்கள் முதலியவர்களின் பெயர்களைப் பின்பு வெளியிடுவேன். அவசியம் தெரிவிக்கவேண்டிய சில விஷயங்களைமாத்ரம் இங்கே தெரிவிக்கிறேன்.

தேசாபிமானமும் பாஷாபிமானமுமுள்ள கனவான்கள் கையொப்பம்செய்து உத்தமோத்தமமான இந்த ஸத்கார்யத்தில் என்னை உத்ஸாஹப்படுத்தி வருவதற்கு நான் அவர்கள் விஷயத்தில் மிக்க நன்றியறிவுள்ளவனாக இருக்கிறேன்.

திருப்பனந்தாள் ஆதீனம், மஹாகனம்பொருந்திய ஸ்ரீலஸ்ரீ. காசிவாஸி, **சோமசுந்தரத்தம்பிரானவர்கள்**, நான் இதனைத் தொடங்கியதுமுதல், அடிக்கடி விசாரித்து ஆதரித்து, எனக்கு மனத்தளர்ச்சி உண்டாகாமல் ஊக்கமளித்துவருவதோடு மஹாபாரதத்துள் * ஸாரமான விராடபர்வத்தை விரைவில் வெளியிடவேண்டுமென்று வற்புறுத்திச் சொல்லி, அதற்குவேண்டும் பொருளுதவியும் செய்தார்கள். அவர்கள் செய்த இப் பெருநன்றியை நான் எந்நாளும் மறவேன்.

"செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது"

என்றபடி, அவர்கள் செய்யும் பேருதவிக்கு யான் செய்யும் கைம்மாறு யாதுளது?

இந்நூலின் பெருமையையும் எனது சிறுமையையும்பார்த்து, என்னவிதமான குற்றங்களிருப்பினும்க்ஷமித்து, தெரிவிக்கவேண்டியவைகளைத் தெரிவித்து, என்னைத்திருத்திஆதரித்து, இக்கார்யம் பூர்த்தியாகும்படி செய்யவேண்டுமென்று பெரியோர்களை நிரம்ப வேண்டுகிறேன்.

இடையூறு சிறிதுமின்றி, இஃது, இனிது நிறைவேறும்படி செய்வித்தருளவேண்டுமென்று எல்லாம்வல்ல ஸர்வேஶ்வரனை ப்ரார்த்திக்கிறேன்.

மணலூர்,
13—3—1912.

இங்ஙனம்,
ம. வீ. இராமாநுஜாசார்யன்.

---

* 'விராடோத்யோகஸாரவாந்' என்பது மஹாபாரதத்திலுள்ள வாக்யம்.

ஸ்ரீ:

# ஸ்ரீ மஹாபாரதம்.

# விராடபர்வம்.

## விஷயஸூசிகை.

### பாண்டவப்ரவேசபர்வம்.

ஸமயபாலனபர்வம்.



கீசகவதபர்வம்.

அத்யாயம். பக்கம்.

அத்யாயம். பக்கம்.



கோக்ரஹண பர்வம்.

அத்யாயம். பக்கம்.

அத்யாயம். பக்கம்.

அத்யாயம். பக்கம்.

விராடபர்வ விஷயஸூசிகை முற்றிற்று.

